
வாங்காரி மத்தாய்
லட்சக்கணக்கான மரங்களை நட்ட ஒரு ஆப்பரிக்க பெண்மணியின் கதை
தமிழில் கிருஷ்ணன்

# வாங்காரி மத்தாய்

## லட்சக்கணக்கான மரங்களை நட்ட  ஒரு ஆப்பரிக்க பெண்மணியின் கதை

பிராங்க் பிரேவோட்

படங்கள் ஆரேலியா பிரோன்ட்டி

தமிழில் கிருஷ்ணன்



அவள் நட்ட மரங்கள் இன்னும் வளர்ந்து
கொண்டு தான் இருக்கின்றன.
வாங்காரி மத்தாய் இன்னும் நம்மிடையே
உயிரோடு தான்
வாழ்கிறார். நெருக்கமானவர்கள் இன்னும்
அவள் பேசும் நான்கு மொழிகளிலும்
(கிக்கூயூ, ஸ்வாஹிலி, ஆங்கிலம், ஜெர்மன்)
அவளுடைய பேச்சை கேட்டு கொண்டு தான்
இருக்கிறார்கள் . சூழலுக்கு தேவையான
வேலைகளை முக்கியமான மனிதர்களோடு
தொடர்ந்து செய்து கொண்டு தான்
இருக்கிறார்.



வாங்காரி
கிராமப்புற  பெண்களுக்கு மரக் கன்றுகளை நடுவதற்கும், பாதுகாப்பதற்கும் ஊக்கம் அளித்தார். இதனால் நாளைய சமுதாயத்திற்கு நம்பிக்கை வெளிச்சம் அளித்தார். அவர்களோடு சேர்ந்து குழிகளை வெட்டினார். மரங்களை நட்டார்.





பெரிய இலைகளை கொண்ட எபோனி  மரங்கள், ஆப்ரிக்கன் துலிப் மரங்கள் நடும்போது வாங்காரி க்கு அவளுடைய பூர்வ குடியே நினைவுக்கு  வந்தது. இஹிதா எனும் ஒரு குக்கிராமத்தில் 1940ல் பிறந்தார்  வாங்காரி . அவள் ஊரருகே தான் கென்ய எரிமலையான மெஜ ஸ்டிக் வோல்க்கானோ மவுண்ட் (Majestic volcano Mount ) இருந்தது. இதை அவளுடைய பூர்வ குடி மக்கள் தெய்வமாக வணங்கினர். இது தான் அவளுடைய வாழ்க்கைப் பின்னணி.



அடர்ந்த காடுகள்  நிறைந்த இடத்தில் தான் அவள் வீடு இருந்தது. அங்கு போங்கோ எனும் அரிய வகை மான்களும், குரங்குகளும், வண்ணத்து பூச்சிகளும் நிறைய இருந்தது. சிறுத்தைகள் வாழ்ந்த இடம் என்பதாலேயே அவள்  குடியின் பெயர் வாங்காரி என அழைக்கப்பட்டது.வாங்காரி என்றால் ‘சிறுத்தை இனத்தை சேர்ந்தவள்’ என்பதே அர்த்தம். அவள் அந்த காட்டின் ஒரு அங்கம் என்று நினைத்தே வளர்ந்தாள்.

தினமும் ஒரு பெரிய அத்திப்பழ மரத்தின் கீழ் இருக்கும் ஒரு ஊற்றுலிருந்தே வீட்டிற்கு தண்ணீர் எடுத்து வருவாள். ஐந்து பிள்ளைகளில் பெரியவள் என்பதால் அவள் வீட்டில் அம்மாவிற்கு பின்பு பெரிய மனுஷியாக கருதப்பட்டாள். அம்மாவிற்கு துணையாக காட்டிலிருந்து  விறகு கொண்டு வருவது, சமைப்பது, மற்ற பிள்ளைகளை பார்த்து கொள்வது , தோட்ட வேலைகளை செய்வது என்று எல்லா வேலைகளையும் செய்தாள்.





ஒரு சிறிய தோட்டத்தை வாங்காரியின் பொறுப்பில்  கொடுத்தாள் அவளது அம்மா. அங்கு தான் குழி தோண்டி செடி நடுவதற்கு  கற்று கொண்டாள். பெரிய அத்தி மரத்தின் கீழ் தான் வாங்காரியின் அம்மா  அவளுக்கு சொன்னால் “ ஒரு மரம் என்பது வெறும் அது கொடுக்கும் விறகு மட்டுமல்ல அதனினும் உயரியது “  என்று. வாங்காரி அதை அவளுடைய வாழ்நாளில் மறக்கவே இல்லை.

வாங்காரியின் தந்தை பிரிட்டிஷ் அதிகாரி சர் நெய்லன் என்பவரிடம் வேலை செய்தார்.  ஆங்கிலேயர்கள் சிறந்த நிலங்களை கையக படுத்தி கொண்டனர். அங்குள்ள பழம்பெரும் மரங்களை வெட்டி டீ தோட்டம் அமைத்தனர். இதனால் ஆங்கிலேயர்கள் பெரும் செல்வந்தர்கள் ஆகினர்.  அங்கு வாழும் கென்ய மக்களின் பெயர்களை கிருத்துவ மத பெயர்களுக்கு மாற்ற வற்புறுத்தினர். இதனால் வான்காரியை மிரியம் என்றும் அழைத்தனர்.

தன் ஊரில் முதல் முறையாக மரத்தை  வெட்டி சாய்த்ததை இன்னும் நினைவில் கொண்டிருந்தாள் வாங்காரி. ஆனால் அப்போது அவள் உணரவில்லை தன் உழைப்பினாலும், பேச்சினாலும் தன் சமுதாயத்தில் ஒரு பெரிய மாற்றத்தை உருவாக்க போகிறாள் என்று.






சாணி பூசி மொழுகிய மண் வீட்டில் ஒரு மாலை பொழுதில் அவர்கள் விளையாடிக்கொண்டிருந்த போது வாங்காரியின் அண்ணன் டெரிட்டு ஒரு கேள்வியை எழுப்பினான்: “ வாங்காரி ஏன் எங்களோடு பள்ளிக்கூடம்  வருவதில்லை” என்று

பெண்கள் எப்படி அம்மாவுக்கு உதவியாக இருக்க வேண்டும் என்றும் கல்யாணம் ஆகும் வறை அதன் பின்னர் தனக்கென்று பிள்ளைகள் பெற்று கொள்ள வேண்டும் என்பதே வழக்கம் என்பதை அறிவாள்   வாங்காரி.

ஆனால் டெரிட்டு எழுப்பிய கேள்வியால் அந்த வீட்டில் ஒரு மாற்றம் வரப் போவதென்பது அவனுக்கும் தெரியாது.

குறிகிய காலத்திலேயே வாங்காரியும் தன் சகோதரர்களோடு  பள்ளிக்கு போக ஆரம்பித்தாள். வாங்காரி எல்லாவற்றையும் கற்கவும், புரிந்து கொள்ளவும் ஆர்வம் கொண்டு  இருந்தாள் . பள்ளிக்கு சென்றதால் அது இன்னும் கூர்மை அடைந்தது . வாங்காரி உயர் நிலை பள்ளி டிப்ளமோ வாங்கிய போது வெகு சில பெண்களாலேயே படிக்க முடிந்திருந்தது. அவள் தன் சகோதிரன் டெரிட்டுக்கும், தன் அம்மாவிற்கும் நன்றி கூறிக்கொண்டாள்.





அமெரிக்காவின் ஜனாதிபதி கென்னெடி 600 கென்ய மாணவர்களை அமெரிக்காவில் மேல் படிப்பு படிப்பதற்காக அழைத்தார். வாங்காரியும் அதில் ஒருத்தியாவாள். அமெரிக்காவில் பனி, வானுயர்ந்த கட்டிடங்கள், வேற்று நிற மக்கள்,, சோள காடுக்கூட தன் ஊரிலிருப்பதை விட வித்தியாசமாகவே இருந்தது. அடுத்த 5 வருடம் வாங்காரி அமெரிக்காவில் கழித்தாள்.

உலகிலேயே மிக பெரிய ஜனநாயக நாடாக இருந்தாலும் இன்னும் பல இடங்களில் கறுப்பின மக்களின் உரிமை மறுக்கப்பட்டு தான் இருந்தது. பல இடங்களில்அவர்களை அனுமதிப்பதில்லை. கென்ய நாட்டில் எப்படி பிரிட்டிஷ் அரசாங்கம் பல பள்ளிகளில் வெள்ளைக்கார பிள்ளைகளை மட்டுமே படிக்க அனுமதித்ததோ அதே போலவே அமெரிக்காவிலும் இருந்தது. இந்தசூழ்நிலையில் தான் கறுப்பின அமரிக்கர்கள் தங்களது உரிமைக்காக போராட தொடங்கினார்கள்.

இதே சமயத்தில் தான் வெகு தூரத்தில் உள்ள கென்யாவிலும் இன்னொரு சம உரிமை போராட்டம் நடந்து கொண்டிருந்தது. தங்கள் நிலத்தை தாங்களே பயன்படுத்துவதற்கான போராட்டமும், சொந்த நாட்டை தாங்களே ஆள வேண்டுமென்ற போராட்டமும் வெற்றி பெற்றது. ஆம் கென்ய நாடு ஒரு சுதந்திர நாடாகியது.

வாங்காரி கென்ய நாட்டுக்கு திரும்பி வந்த சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவுக்கு வந்தது. கென்யாவும் சுதந்திரம் அடைந்தது. ஆனால் அங்கிருக்கும் மரங்களுக்கோ சுதந்திரம் இன்னும் வரவில்லை என்றே சொல்லலாம். கென்ய மக்களும் ஆங்கிலேயர்கள் போலவே மரங்களை வெட்டி டீ , காபி, புகையிலை தோட்டங்களில் பயிரிட்டனர், இதை மேலை நாட்டிற்கு ஏற்றுமதி செய்து பணம் சம்பாதிப்பதிலேயே முழு ஆர்வம் கொண்டிருந்தனர்.



பல் உயிர் பாதுகாப்பின் ஆராய்ச்சிக்காக வாங்காரி நாடு முழுவதும் பயணித்தார். காட்டு விலங்குகள் காடுகளே இல்லாததால் அழிந்து வருவதை கண்டு மிகவும் அதிர்ச்சியடைந்தார். பெண்கள் தங்கள் குழந்தைகளுக்கு உணவு கொடுக்க முடியாமல் போனது. உணவு கொடுக்கும் மரங்கள் எல்லாம் வெட்டப்பட்டு பண பயிறு தோட்டங்களாக செல்வந்தர்களால் மாற்றப்பட்டன. மண்ணை தடுத்து நிறுத்த மரங்கள் இல்லாததால் செழுமையான மண் ஆறுகளில் அடித்து செல்லப்பட்டன.



மரம் வளர்ப்பதையும், காடுகள் உருவாக்குவதை நாட்டிற்கான செல்வம் என மக்களிடம்  பரப்புரை செய்வதேயே வாங்காரி தான் படித்ததிற்கான அர்த்தமென உணர்ந்தாள். ஆயிரக்கணக்கான மரங்களை  நடுவது அந்நாட்டின் ஆண் பெண் என எல்லோர் வாழ்விலும் ஒரு மாற்றத்தை உருவாக்கும் என கூறினாள்.

ஒரு மரம் அது தரும் விறகை விட மதிப்புடையது என்று அவள் அம்மா கூறியது அவள் நினைவில் எப்போதும் இருந்தது. ஒரு மரம் நிழல்  தருகிறது, பழம், காற்று தருகிறது, பறவைகள் கூடு கட்டுவதற்கும், பூச்சிகள் தங்குவதற்கும் உறைவிடமாக இருக்கிறது . ஒரு மரம் நிகழ்காலத்தை கடந்து, பல தலைமுறைகள்  கடந்து அணைத்து உயிர்களுக்கும் பலன் கொடுத்து கொண்டே இருக்கிறது.

வாங்காரி தன் சமூகத்தில் ஒரு பச்சை புரட்சி  நடக்கவேண்டுமென்றே நினைத்தாள். பொறுமையாக இருப்பதில் ஒன்றும் பயனில்லை என்று புரிந்து கொண்டாள். கிறீன் பெல்ட்  இயக்கம் (Green Belt movement ) ஒன்றை தொடங்கினார். இதன் நோக்கம் மரங்கள் நடுவதே ஆகும்.

கிராமம் கிராமமாக சென்று மரங்கள், பறவைகள், விலங்குகள், குழந்தைகள் பற்றி பேசுவதே லட்சியமாக கொண்டார். நிகழ்காலம் பல தடைகளை கொண்டிருந்தாலும் எதிர்காலத்தை நோக்கி மக்கள் சிந்திக்க வேண்டும் என்று  கூறினார். அவர்களுடைய பிரச்சினைகளை அவர்களுடைய மொழியிலேயே உரையாட ஊக்கமளித்தார்.

அவருடைய வார்த்தைகள்  எல்லா கிராமங்களிலும் பேச்சாக மாறியது. நாளிதழ்கள் மூலமாகவும், கடிதங்கள் மூலமாகவும் கென்ய அரசாங்கத்திற்கும்  சென்றடைந்தது. பல ஆயிரம் மரம் நடுவதற்கு காசும் தேவைப்பட்டது.



வாங்காரி நர்சரிகளை பல கிராமங்களில் திறந்து வைத்தார் அதை அந்தந்த ஊர் பெண்களையே பராமரிக்க வைத்தார். ஒவ்வொரு மரத்தையும் பராமரிப்பதற்கு ஊக்க தொகையும் கிடைக்க வழி செய்தார்.

காடுகளை அழித்து பணம் சம்பாதித்த அரசாங்க அதிகாரிகள் வாங்காரியை தடுத்து நிறுத்த முயன்றனர். யார் இந்த பெண்மணி? ஆண்களுக்கு முன்னாள் பெண்கள் வாய் திறப்பதற்கே பயப்படும் இந்த சமுதாயத்தில் தைரியமாக முழக்கமிடும் இந்த குரல் யாருடையதோ?

தையிரியம் உடைய பெண்கள் வீட்டில் சும்மா இருந்து விட கூடாது. தன்னுடைய குடும்பத்திற்கும் , கிராமத்திற்கும் ஏன்? மொத்த ஆப்பிரிக்காவிற்கும் அவளுடைய ஆற்றல் சென்றடைய வேண்டும். சிறுத்தை இனத்தை சேர்ந்தவள் வாங்காரி. தடைகளால் சோர்வடைய்பவள் அவள் இல்லை . காடுகளை உருவாக்கி கொண்டே இருந்தாள்.



ஒரு மரத்தை கூட வெட்ட விட கூடாது என்பதில் உறுதியாக இருந்தார் வாங்காரி. தன் நாட்டின் ஜனாதிபதியான டேனியல்அரோப் மோய் முன்பும் அவர் பயப்படவில்லை. இதே மனிதர் கென்ய நாட்டை இருபத்தி நான்கு ஆண்டுகள் ஆண்டார்.

நைரோபியில் உஹுரு பூங்கா நடுவில் தன்னுடைய  சிலையையும், 60 மாடி கட்டிடம் ஒன்றையும் கட்ட திட்டமிட்டுருந்தார். வாங்காரி தன்னுடைய நண்பர்களை சேர்த்து கொண்டு மிக பெரிய போராட்டத்தை ஒருங்கிணைத்தார். இதனால் அந்த திட்டங்கள் கைவிடப்பட்டது.

கருறா என்ற காட்டிற்குள் ஒரு பெரிய ரியல் எஸ்டேட் திட்டத்தை கொண்டு வரமுயற்சி செய்தனர். அதை கொண்டு வந்தால் அறிய விலங்குகளான  நீல வண்ண குரங்குகள்(blue monkey ), ஆற்று பன்றி (river hog ) வகைகள் அழிந்து விடும். வாங்காரி சற்றும் பயம் கொள்ளாமல் இந்த திட்டத்தை எதிர்த்தார். மொத்த உலகையும் உலகிற்கும் இந்த அழிவின் அபாயத்தை உணர்த்தினார். வெட்டிய மரங்களிக்கிற்கு பதிலாக மீண்டும் மரங்களை நட வைத்தார். ஜனாதிபதி மோயை அந்த திட்டத்தை திரும்ப பெற வைத்தார்.
இந்த போராட்டத்தின் வெற்றிக்கு பிறகு ஒரு கென்ய மனிதர் கூறினார் “இப்போது கென்யாவில் உள்ள ஒரே தைரியமான மனிதர் இவர் மட்டுமே”





அதிகாரத்துக்கு எதிராக செயல்படுவது என்றுமே ஆபத்தாகவே இருந்தது . வாங்காரியை அரசு எதிரியாகவே கருதியது. அவளுக்கு நன்கு தெரியும் ஜனாதிபதி தன்னை அடக்குவதற்கு எதுவேனாலும்  செய்வார் என்று. அதிகார திருஷ்ப்ரயோகம் செய்வதில் சிறிதும் தயங்க மாட்டாரென்று. அமைதியாக போராட்டம் செய்தவர்களையே சுடும் ஆணை கொடுத்தவர் தானே அவர்.

வாங்காரி பல முறை அவமானப்படுத்தப்பட்டார், சிறையிலும் அடைக்கப்பட்டார். ஆனால் வாங்காரியோ விடுவதாக இல்லை. ஒவ்வொரு முறையும் சிறையிலிருந்து வெளி வந்த போதும் அரசியல் காரணங்களுக்காக கைதி செய்யப்பட்டவர்களுக்கு குரல் கொடுத்தார். சிறைகொடுமைகளுக்கு எதிராக பேசினார். கொலை மிரட்டல்களுக்கு பஞ்சமே இல்லை.  பல முறை கென்யாவை விட்டு தலைமறைவாக வாழ வேண்டியதாயிற்று . ஆனால் அவருடைய லட்சியத்திலிருந்து எள்ளளவும் மாறவில்லை.



ஒரு மரத்தை போலவே ஜனநாயகமும் தழைக்க வேண்டும் என்று நினைத்தார் வாங்காரி. அவளுக்கு தெரியும் சட்டங்களை அமைப்பதில் தன் நாட்டு மக்கள் ஒற்றுமையாக வேலை செய்தால்  அது ஒரு முழு ஜனநாயக நாடாக உருவெடுக்கும் என்று.



அவள் நாட்டு குழந்தைகள் அத்தி மரத்தின் கீழ் சுத்த நீரிலுள்ள தவளைகளோடு விளையாட வேண்டும், அவர்கள் பசியாக இருக்கும் போது உண்ணுவதற்கு உணவு கிடைக்க வேண்டும் என்பதே அவள் கனவு.

மரங்களை காப்பாற்றுவதற்கு பல போராட்டங்கள் செய்தாக வேண்டியிருப்பதை உணர்ந்தாள். சூழல் சார்ந்த ஒரு அரசியல் கட்சி ஒன்றை ஆரம்பித்தாள் வாங்காரி ஜனாதிபதி மோயை எதிர்த்த எல்லா கட்சிகளையும் ஒருங்கிணைத்து அவருக்கு எதிராக போராட வைத்தாள்.



எதிர்ப்புகள் அதிகரிக்க ஜனாதிபதி மோய் மக்களை பிரித்து ஆளும் தந்திரத்தை உபயோகித்தார். குழுக்கள் ஒவ்வொன்றும் சண்டை போட்டு கொண்டிருந்தால் தாம் நிம்மதியாக நாட்டை ஆள முடியும் என்று அவர் நன்கறிவார்.

வாங்காரி தனது கிறீன் பெல்ட் இயக்கம் (green belt movement) மூலம் மோயின் திட்டத்தை உடைத்தார். அவர் சண்டை நடக்கும் குழுக்களிடையே மரக் கன்றுகளை கொடுத்து ஒருவொருகோருவோர் பகிர்ந்து கொள்ளுமாறு செய்தார். இது அவர்களுக்கிடேயே அமைதியை கொண்டு வந்தது. ராணுவ வீரர்களை கூட மரங்கள் நட வைத்தார்.

கொஞ்சம் கொஞ்சமாக அந்த அமைதி மரங்கள் பலன்களை கொடுக்க ஆரம்பித்தன.





2002ல் ஜனாதிபதி டேனியல் அரோப் மோயின் ஆட்சி கவிழ்ந்தது. புது அரசியலமைப்பு உருவாக்கப்பட்டது. இதன்படி மோய்க்கு ஓய்வு கொடுக்கப்பட்டது. அவருடைய கட்சி தேர்தலில் தோற்கடிக்கப்பட்டது. வாங்காரி பாராளுமன்ற தேர்தலில் வென்றார. புதிய ஜனாதிபதி வாங்காரியை சூழல், இயற்கைவளம், வனம் பாதுகாப்பு மந்திரியாக்கினார்.

அம்மா என்று ஆசையாக அழைக்கப்பட்ட வங்காரிக்கு வாழ்க்கையில் ஒரு புதிய தொடக்கமாக இருந்தது. இப்போது முடிவுகள் எடுக்கும் அதிகாரம் அவருக்கு இருந்தது. பெண்களுக்கும் ஆண்களுக்கு, மரங்களுக்கும் ஒரு பாதுகாப்பான நாடாக கென்யாவை உருவாக்க முடியும்.



வாங்காரியாள் இன்று கென்யாவில் மிக அதிக மரங்கள் உள்ளன.  ஜனநாயகமும் நிலையாக உள்ளது. கிறீன் பெல்ட் இயக்கம் கொங்கோ போன்ற நாடுகளில் இன்னும் மரங்களை பாதுகாக்கிறது. இது உலகிலேயே இரணடாம் பெரிய காடாகும்.

வாங்காரியும் அவரது தோழர்களும் சேர்ந்து 3 கோடி மரங்களை நட்டு வைத்தனர். இன்றும் ஒரு மரமாவது நடப்பட்டு கொண்டே தான் இருக்கிறது.

எண்ணிலா விதைகளையும், நம்பிக்கையையும் விதைத்ததிற்கு நோபல்  அமைதி பரிசு கொடுக்கப்பட்டது. இந்த விருதை பெரும் முதல் ஆப்பிரிக்க பெண்மணி அவரே. இதற்காக நந்தி மரம் ஒன்றை அவருடைய வீட்டில் நட்டார். இது நையீரி எனும் ஊரில் கென்ய மலை அடிவாரத்தில் உள்ளது.

அந்த மலையும், அதில் வாழும் சிறுத்தைகள்,  குரங்குகள் மற்ற எல்லா விலங்குகளுக்கும், மனிதர்களுக்கும் அன்று கொண்டாட்டம் தான்!

**समाप्त**



வாங்காரி மாத்தாய்

வனங்களின் அன்னை

அவருடைய எண்ணற்ற பொறுப்பாக்களிடையே அவ மரம் நடுவது எனும் எளிமையான வேலையை செய்ய தவறியதே இல்லை.

